உ

கடவுள் துணை.

# உரோமரிஷி நாயனார்.

அருளிச்செய்த

## வயித்திம்-நூா.

இவை

சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.



கோளப்பஞ்சேரி

செல்லப்பமுதலியாரவகளது

சென்னை.

ஜீவகாருண்யவிலாசம்பிரஸிற்

பதிப்பிக்கப்பட்டது





1910

# உரோமரிஷிவைத்தியஅவிள்தஅட்டவணை.



உ

சிவமயம்.

---

## உரோமரிஷிநாயனார் அருளிச்செய்த

# வைத்தியம் - நூ.

காப்பு.

விருத்தம்.

மூலமுதலாதாரமுடிவினின்ற
மூர்த்தியெனுங்கணேசரதுபாதங்காப்பு
தாலமெலாங்கடந்துநின்றதாயின்பாதஞ்
சனகாதிநால்வரதுபாதம்போற்றி
காலமெனும்பிறப்பிறப்புங்கடந்துநின்ற
கருணைதருநந்திசர்பாதம்போற்றி
ஆலமதையுண்டகண்டர்போற்றி
ஐஞ்ஞூற்றையானுரைக்கஅம்பாள்காப்பே. (க)

அம்பரத்திலாடுகின்றவையர்பாதம்
அனுதினமுமனதினில்வைத்தருளும்பெற்று
தம்பரத்திலெனையாண்டபுசண்டர்பாதஞ்
சதாநித்தம்பூசைபண்ணித்தாசனாகி
பம்பரம்போலுலகமெல்லாமாட்டிவைக்கும்
பராபரத்தின்கிருபையதாற்பாசநீக்குஞ்
செம்பருத்திப்பூவதுபோற்சிவந்துநின்ற
சின்மயத்தின்பாதமலர்சோதிகாப்பே. (உ)

சோதியெனுஞ்சுடரொளியாய்நின்றதேவி
சொற்பெரியநாதர்கள்பாதம்போற்றி
வாதியெனும்பேர்படைத்துநின்றோர்க்கெல்லாம்
வகைவிவரமாய்த்தெரியவசனித்தேன்யான்

ஆதியெனும்பராபரத்தின்கிருபையாலே
ஐஞ்னூற்றின்றிரந்தேர்ந்துவறியவென்றும்
பாதிமதிதரித்தசிவன்பாதம்போற்றி
பராபரத்தினிறைந்துநின்றபாதம்காப்பே. (௩)

நூல்.

ஆதாரமானதொருமூலத்துள்ளே
அகண்டமகாமேருவெனநின்றமூர்த்தி
பாதாரந்தனைப்பணிந்துவைந்நூற்சொல்வேன்
பரவெளியினின்றதொருபரனைப்போற்றி
காதாரகேட்டுணர்ந்துவென்னையாண்ட
கடாட்சமதுநந்தீசர்கருணையாலே
தாதாரும்ரோமனென்றுபேரும்பெற்று
சாயுச்சியபதவிதனிற்சார்ந்தேன்பாரே. (௪)

பாரப்பாஞானமுதல்யோகமார்க்கம்
பரிபாஷைகருவகற்றிவாதப்போக்கு
காரப்பாஅட்டமாசித்தியோகம்
கருணைபெறவஞ்சனமும்வசியமாற்றஞ்
சீரப்பாமோடியிலேயனந்தம்போர்க்கு
திறமானசரக்குவைப்புசெய்பாகங்கள்
ஆரப்பாவெனைப்போலசொன்னாரில்லை
அதனாலேயென்னூலையொளித்தார்பாரே. (௫)

ஒளித்தாரேசித்தரெல்லாம்பேசிக்கொண்டு
ஓகோகோகுருமுறையைச்சொன்னதாலே
கழித்ததொருவுப்பதனைச்சுன்னமாகக்
காட்டினேன்வழலையென்றகருவையெல்லாம்
விழித்தபொருளுட்கருவைவெளியதாக
விளம்பினேனதாக்கள்மறைப்பையெல்லாம்
அழுத்தியேசாஸ்திரத்தையொளித்துப்போட்டார்
அருட்பெருதங்கும்பமுனியையர்தானே. (௬)

தானானவழலையுப்புசுன்னஞ்சொன்னேன்
தண்மையென்றசெந்தூரஞ்சாரநீராம்
ஊனானஅடிமுடியின்பொருளையெல்லாம்
உள்ளுணர்ந்துஆராய்ந்துஉரைத்ததாலே

தேனானவென்குருவும்புசண்டமூர்த்தி
சேயனெனரோமனெனப்பேருமிட்டு
காணாதபொருளெல்லாமறைப்புநீக்கி
காட்டுவன்முப்பூவின்கருவைத்தானே. (எ)

முப்பூவின்கருவின்விபரம்.

கருவென்னவழலையென்றமுப்பூதன்னைக்
காணவென்றுலென்குருவைக்கருத்தில்வைத்து
உருவென்னவாதத்திலண்டபிண்டம்
உண்மையென்றகருவதனையுரைக்கக்கேளு
குருவென்னவென்றுல்மனமேயாசான்
கூர்ந்துபார்நிலவுப்புகொடியவேகங்
தருவென்னநாதமென்னபூமிநாதஞ்
சமிசயங்களில்லையடாதாயுமாமே. (அ)

பூமிநாதம் விளைவின்நிலவிபரம்.

தாயானநாதமதுவிருக்குந்தானஞ்
சாற்றுகிறேன்யானுமதையறிந்தமட்டும்
சேயானமதலையைப்போற்சொன்னேன்யானும்
தீர்க்கமடாவழலையதுதீரந்தன்னை
மாயாதேமன்மதனைப்பேதியாதே
மயக்கமதிற்சிக்காதேவாய்விடாதே
ஓயாதேதியானமதைமனத்துள்வைத்து
ஓகோகோவுவர்நிலத்தைப்பார்த்துவா... (கூ)

வாரப்பாபூநீறுவிளையுந்தானம்
வரிசைபெறச்சொல்லுகிறேன்மறைப்பைநீக்கி
சேரப்பாவத்தலந்தான்சிவந்துகாணும்
சிவனுமையுமங்கிடத்திற்சேர்ந்துவாழ்வார்
காரப்பாவங்கிடத்திற்பூமிநாதங்
கதிரதுபோற்பொங்குமடாபருவந்தன்னில்
ஆரப்பாவங்கிடத்திற்செல்லும்போது
அதிகமடாசோதியதுவமர்ந்தவாறே. (ய)

அமர்ந்ததுவுமேதெனவேதியானத்தாலே
யல்லாதால்மனிதரங்கேசெல்லப்போமோ
...ந்தசவம்போற்றிரிந்தசுணக்கனால்
சீறுமடாவங்கிடத்திற்செல்லப்போகா

நமன்றனக்குநமனைகத்தியானஞ்செய்து
நாதாந்தசத்தியநாட்டம்விட்டால்
சுமந்தலுத்தமாடதுபோனின்றுயானுற்
சோதியடாவுன்னிடத்தில்தோணுவாறே. (௰௧)

தோணுதுவென்றுசொன்னேனேதானுலே
சுத்தமனதில்லாததோஷத்தாலே
காணுதுவென்றுசொன்னேனென்மக்காள்நீங்கள்
கன்னியதுபூசையைநீமறந்ததாலே
கோணுதேயவளுடையபூசைசெய்ய
குடியிருந்துவத்தலத்திற்பார்க்கும்போது
ஆணுதவளுடையசோதிதானும்
அந்திடத்திற்போகுமடாவறிந்துபாரே. (௰௨)

அறிந்துகொண்டுதம்பனத்தைதியானஞ்செய்து
ஆத்தாளைப்பூசித்துவருளும்பெற்று
சொரிந்தமலர்போனிற்குஞ்சோதிதன்னை
சுருக்காகநீயெடுப்பாய்புட்பம்போல
பரிந்துமிகவெடுத்ததனைப்பீங்கானுள்ளே
பக்குவமாய்வைத்ததனைசொல்லக்கேளு
பிறிந்ததுவும்போகாதுவுன்னைவிட்டு
பூரணியைப்பூசைபண்ணிபுகலக்கேளே. (௰௩)

கேளப்பாஅப்பும்உப்புமொன்றுய்ப்போச்சு
கிருபையிதிற்சொல்லிவிட்டேன்வழலைமார்க்கம்
தேளப்பாகொட்டுதல்போற்சுன்னமாச்சு
சிவசிவாமுப்பூவின்குருவுமாச்சு
நாளப்பாகளிச்சுன்னமிதுவுமாச்சு
நாதமடாசவர்க்காரக்குருவுமாச்சு
வாளப்பாயிதையெடுத்துவைத்துக்கொண்டு
மைந்தனேசரக்குகளைமாட்டியூதே. (௰௪)

ஊதவேசரக்குவகைவெந்துநீறு
மொருநொடியிற்பாஷாணங்கட்டிப்போகும்
பாதையிலேயிதைவிட்டாற்பாதையில்லை
பக்குவமாய்ச்சொல்லிவைத்தேனிந்தநூலிற்

போதையிலேசொல்லிவிட்டேனென்றுசொல்லி
  புகழ்முனிவர்தானெளித்தாரிந்தநூலே
பேதையைப்போலவரிடத்திற்றெண்டுபண்ணி
  பின்புநான்வாங்கிவந்தேன்பேணிப்பாரே. (யரு)

பேணியேயென்னூலேவெளியில்விட்டால்
  பிழைவருமேயுன்குலந்தானீனமாகும்
ஊணியேவெகுகோடிநரகில்வீழ்வாய்
  ஓகோகோசாபமதுபிடிக்கும்பாரு
ஆணியேமனதில்வைத்துக்காத்தாயானால்
  அரனுனதுவசமாகியருளுஞ்செய்வார்
பாணியெனுமீஸ்வரியாள்கிருபையுண்டு
  பராபரத்தில்வைத்திடுவாள்பாருபாரே. (யசா)

இரவிமதிமுப்பூவிபரம்.

பாரப்பாமுப்பூவின்கருவைச்சொன்னேன்
  பருவமதுசொல்லுகிறேனின்னங்கேளு
ஊரப்பாவுவர்மண்ணேவாரியென்ன
  உள்ளபடிவாதமதுக்காதாதப்பா
நேரப்பாயின்னமொருகண்வைக்கேளு
  நிகழ்த்துவேன்பிண்டமதுமுப்பூச்சுன்னஞ்
சேரப்பாபொற்சிலேபோல்பெண்ணேப்பாரு
  சென்றவள்தான்கெற்பத்தில்பிண்டமாமே. (யஎ)

பிண்டமென்றுவிளங்கொடியாணமுதலாம்பிண்டம்
  பெருமைபெறத்தானெடுத்துச்சொல்லக்கேளு
அண்டமெனுமாத்மாவிலஞ்சானபிண்டம்
  அப்பனேயதுவலியவிழுந்துதானல்
குண்டமெனும்பீங்கானிலெடுத்துவைத்து
  கூர்ந்துபார்பெண்ணுகில்மதியுமாகும்
பிண்டமதிலாணுகில்ரவியுமாச்சு
  பெருமார்க்கஞ்சொல்லுகிறேன்பெருமைதானே. (யஅ)

காணப்பாபிண்டமதைக்கொண்டுவந்து
  கடுகுபொடியாய்நறுக்கிப்பாண்டத்திட்டு
தோணப்பாயிதுக்கடுத்தசெயநீர்தானும்
  சொல்லுகிறேனேனறியேன்யானறிந்தமட்டும்

வேணப்பாவுருப்புப்படிதானைந்து
　　வெள்ளைகற்சுன்னமதுபடிதான்மூன்று
ஊணப்பாவுப்பதுவும்படிதான்மூன்று
　　உத்தமனேயிதுமூன்றுமொன்றாய்ச்சேரே. (௰௯)

ஒன்றாகவிதுமூன்றும்பாண்டத்திட்டு
　　உத்தமனேசிறுபெண்ணீர்படியீரெட்டு
நன்றாகக்கூடவிட்டுக்கலக்கிக்கொண்டு
　　நாலாநாள்தெளிவதனையிறுத்துவாங்கி
பண்டானவடுப்பில்வைத்துதீயைமூட்டு
　　பருவமுடன்குழம்புமேபால்வருதல்கண்டு
ஒன்றானபீங்கானில்வழித்துவாங்கி
　　விபரமாய்ரவிமுகத்திலுலரவையே. (௨௰)

உலரவைத்துவுப்பதுதான்பலமீரெட்டு
　　உத்தமனேசாரவகைசொல்லக்கேளு
அலரவைத்தநவாச்சாரம்வீரம்பூரம்
　　அப்பனேவெடியுப்புசீனஞ்சூடன்
மலரவைத்தவெள்ளைமுதற்றுருசீரெட்டு
　　மைந்தனேவகைக்கொன்றுபலமொன்றாக
சலாவைத்துபொடிசெய்துவுரலிலிட்டு
　　கண்டித்ததலைப்பிண்டங்கலந்துவையே. (௨௧)

கலந்துமேகட்டப்பாறையினாற்குத்திக்
　　கண்ணிலிடுமையதுபோற்கண்டித்தேதான்
மலர்ந்துமேமெழுகதுபோலானபின்
　　மைந்தனேபாண்டத்திலிட்டுமூடி
கலந்துமிகமண்ணரைத்துசீலைசெய்து
　　நாற்சாண்குழிவெட்டிப்புதைத்துப்போடு
அலர்ந்துமேநாற்பதுநாட்சென்றபின்பு
　　அப்பனேயெடுத்துப்பார்செயநீராமே. (௨௨)

ஆகுமேயந்நீரைப்பீங்கானுள்ளே
　　அப்பனேவிட்டுநீரவியில்வைத்து
ஏகுமேயுப்பதுதானென்னசொல்வேன்
　　என்பிள்ளாய்தன்னமென்றால்கொடியவேகம்

போகுமேரவிபீசமிதுதானப்பா
புகலுவாருவரென்றும்வண்ணானென்றும்
வேகுமேபட்டவிடமெல்லாந்தீயாய்
வேதாந்தசத்தியென்றுமிதற்குப்பேரே. (உ௩)

பேரானஅடியென்றுமூலமென்றும்
பேசாதசாரமென்றுமனந்தானென்றும்
மாறானமாதவிடாய்வழலையென்றும்
மகாபெரியமாலென்றும்யோனியென்றும்
பாறானபிண்டமென்றும்புளிதானென்றும்
பருவமுடன்சூரியன்றன்பீசமென்றுஞ்
சாறானசாகாதகால்தானென்றுஞ்
சாற்றுவாரிதனுடையநாமந்தானே. (உச)

தானானசுணுப்புவிபரங்கேளு
சாற்றுகிறேன்முன்போலப்பெண்ணைப்பார்த்து
தேனானஅண்டமதுஆண்தானப்பா
சேரவேமுன்போலேநொறுக்கியேதான்
ஊனானவுப்பதுதான்முன்போற்செய்து
உத்தமனேயதுதன்னுல்கனநீராடுங்
கோனானமுன்போலசரக்கைக்கேளு
குறிப்பாகப்பூம்புடம்வைத்திடாயே (உரு)

வைத்திட்டுமுன்போலச்செயநீர்வாங்கி
மைந்தனேகுட்டோரியொருபலம்போட்டு
மெய்த்திட்டமாகவேதான் உப்பாய்ப்போகும்
வேணபடியிதன்பெருமைவிள்ளப்போமோ
கைத்திட்டமானபலனிதற்குநாமங்
கதிரென்றுஞானிரியென்றுங்காரமென்றும்
பொய்த்திட்டுபோகாமற்சொன்னுரையா
போக்கோடேவென்குருவுப்புசண்டர்தானே. (உ௬)

தானென்றும்அங்கியென்றும்மாதியென்றும்
தான்வெள்ளைச்சுன்னமென்றும்வீரமென்றும்
ஊனென்றவெடியுப்புஊமையென்றும்
உத்தமனேவேகாததலைதானென்றுங்

காரனென்றவாகாசக்கம்பியென்றும்
வருமென்றும்வஸ்துவென்றுங்காட்டுவார்கள்
பாரனென்றசமாதியுப்புநிலவுப்பென்றும்
பரிதிமுத்துச்சிப்பியென்றும்பாடினாரே. (உஎ)

பாடினாரவாவர்களனேகம்பேர்கள்
பண்பானசாத்திரங்களனேகங்கோடி
தேடினாரென்னுடைவைந்நூர்தன்னை
சிவசிவாகாணமல்லொளித்தார்சித்தர்
ஆடினாரிதைக்கண்டபெரியோரெல்லாம்
அண்டமுதற்பத்மளவுமனேகமுண்டு
ஓடினார்பொதிகமலேஐயர்தாமும்
ஓகோகோஅவர்கொடுத்துஉரைத்திட்டாரே. (உஅ)

உரைத்திட்டமொழிகேட்டுசித்தரெல்லாம்
ஒடுக்கமதில்வைத்திருந்துபார்க்கும்போது
கரைத்திட்டவெல்லாமப்பொருளையெல்லாங்
கண்டுமேசாத்திரங்கள்கட்டினார்கள்
மறைத்திட்டுப்போகாமலின்னமொன்று
மைந்தனேசொல்லுகிறேன்மார்க்கங்கேளு
முறைத்திட்டந்தப்பாமல்முன்போற்பெண்ணை
முயற்சியாய்பார்த்தெடுத்துமுறையைக்கேளே. (உகூ)

கேளப்பா அவளுடையநாதந்தானுங்
கெட்டியாய்முதற்றரந்தானெடுத்துவந்து
கோளடாவாரமதிலாதிவாரங்
கொண்டுவந்தாலதின்பெருமைகூறுவேன்யான்
ஆளப்பா ஆணுமல்லபெண்ணுமல்ல
அப்பனேஅலியுமல்லவறிந்துகொள்ளு
வாளப்பாயிதையெடுத்துஉப்பாய்பண்ண
வகைசொன்னரகத்தீசர்மார்க்கந்தானே. (௩0)

தானென்றநந்தீசர்முறையைக்கேளு
தண்மைபெறவெந்தனுக்குச்சாற்றினார்பார்
கோனென்றவையரவர்சொன்னபோக்கு
கூறுவேன்ஐந்நூற்றில்குறைவராமல்

ஊனென்றநாதமடா பிங்கானுள்ளே
　யுத்தமனைகொண்டுவந்துசொல்லக்கேளு
பானென்றரவிபீசம்விராகனென்று
　பதமாகப்பொடித்திட்டுச்சொல்லக்கேளே.

வாதத்துக்கு ஆதியுப்பு.

கேளடாகூடனதுபல்ந்தானென்று
　கெட்டியாய்ப்பூரமதுபலந்தானைந்து
வாளடாசீனமதுபலந்தான்மூன்று
　மயங்காதேகொச்சியென்றவீரமூன்று
நாளடாசெய்துநீபிங்கானுள்ளே
　சுரோணிதத்திற்கலக்கியேசொல்லக்கேளு
ப்ராளடாபோகாமற்சீலைமண்செய்
　பக்குவமாய்க்குழிவெட்டிப்புதைத்துப்போடே.

போடுநீபட்சமதுகடந்துதானால்
　பூரணியைப்பூசைபண்ணியப்பால்வாங்கே
ஆடுநீகோடிவித்தையிந்தநீரில்
　அம்மம்மாவாச்சரியமாயிநாதம்
ஓடுநீயிந்நீரைரவியில்வைக்க
　ஓகோகோவுப்பாகுமுண்மைசொன்னேன்
கூடேநீயிந்தவுப்பைகண்டபோதே
　சொரூபமென்றசித்தியெல்லாமிதற்குள்ளாச்சே.

ஆச்சப்பாவிப்பூவைமறைத்தார்சித்தர்
　அதிகமாமுப்பூவின்சுன்னத்தாதி
போச்சப்பாஇதைவிட்டதோஷத்தாலே
　பேர்க்கோடேவாதமுறைபொருளுங்காணார்
நீச்சப்பாநிலையாதகேணியாகும்
　நீற்றினத்துக்காதியடாவிந்தவுப்பு
பேச்சப்பாபேசாதமவுனவுப்பை
　பேசினதாலென்னூலைமறைத்தார்பாரே.

பாரேநீவாதத்துக்காதிசொன்னேன்
　பருவமுடன்சேர்க்கும்வகைசொல்லக்கேளு
காரேநீமுன்னுரைத்தரவிமதியின்பீசங்
　கருத்துணர்ந்துநீயெடுப்பாய்களஞ்சியாறு

சேரோநீயிம்மூன்றுமொன்றாய்ப்போட்டு
 தீர்க்கமாய்க்கல்வத்திலரைக்கக்கேளு
வேறேநீயெண்ணாதேமெலிந்திடாதே
 மெய்தளர்ந்துபோகாதே வெண்புழுகுக்கூட்டே.

கூட்டவேகளஞ்சியதுமூன்றைபபோட்டு
 குளிரவேகல்வத்திலாட்டும்போது
மாட்டவேமையதுபோலாகும்பாரு
 மைந்தனேரவிமுகத்தில்வைக்கும்போது
ஆட்டவேபொங்கியதுசுன்னமாகும்
 அப்பனேபீங்கானில்பதனம்பண்ணு
வாட்டமென்னவொன்றல்லோர்முப்பூச்சுன்னம்
 வந்ததடாவிதின்பெருமைவழுததப்போமோ.

தேவிசக்கரம்.

போமென்றமுப்பூவின்சுன்னந்தன்னைப்
 புகழ்பெறவேபீங்கானில்வைத்துமூடி
ஆமென்றயர்த்தாளேப்பூச்சுன்னம்
 அதிதிமென்றசக்கரத்தைசொல்லக்கேளு
வாமென்றமுக்கோணமிட்டுமேலே
 வளையமொன்றுவதின்மேலேயிதழ்தானெட்டு
வேமென்றவறுகோணமதின்மேலிட்டு
 வீசுவாயதின்மேல்லெட்டிதழும்போடே.

போடவேயதின்மேலேமூன்றுவரைகீறி
 புகழ்பெறவேகோட்டையதில்வாசிறுது
ஆடவேமுக்கோணமறுகோணத்தில்
 அப்பனேசூலமிட்டுச்சொல்லக்கேளு
நாடவேமுக்கோணவிதழினுள்ளே
 நாதாந்தசத்திகளையெட்டும்போட்டு
சாடவேயறுகோணமிதழெட்டுக்குள்ளே
 சதானந்தவயிரவர்களெட்டுஞ்சாற்றே.

சாற்றவேயறுகோணமீதினுச்சி
 தன்மைபெறவஷ்டதிக்குப்பாலகரைநாட்டு
போற்றவேயிதழ்சந்துநடுமையத்துள்
 போட்டிடுவாயட்டசெகந்தன்னைத்தானும்

காத்தருளவேனுமென் றுமுக்கோணத்தில்
கருணைபெறவிதழ்சந் துக்கருவைக்கேளு
ஆற்றவேயந்திடத்திலட்டநாகம்
அப்பனேயிதழெட்டுவரையக்கேளே. ந௯

கேளடாமுக்கோணநடுமையத்துள்
கிருபைபெறவட்டமிட்டுச்சொல்லக்கேளு
கோளடாவாராமலாயிசங்
குறிப்பாகத்தானிடுவாய்கூறுவேன்யான்
பாளடாபோகாதுஅகாரந்தன்னை
பார்க்கவேயதினடுவிலிருத்திப்போடு
கேளடாவதின்சுழியின்மேலேதானுங்
கீர்த்திபெறப்பேதனமுங்கிறிடாயே. ௪0

சீறியேயகாரமுடிதன்னிலேதான்
கிலியுமென்றுபோட்டுவ்டுயேகபிசம்
ஆறவேயப்பிசமுச்சிமீதில்
அப்பனேயஃகெளவுஞ்சுழித்துப்போடு
தேறவேஆயினதுபிசமாச்சு
சிவசிவாயிதின்பெருமைசெப்பார்செப்பார்
மாறவேயகாரவடிபிசந்தானும்
மைந்தனேயிம்மென்றுவைத்திடாயே. ௪க

வைத்திட்டமுக்கோணமுச்சிமீதில்
மைந்தனேஸ்திரீயென்றுவைத்துப்பின்னும்
கைத்திட்டமாகத்தானிருமூலைக்குங்
கணக்காய்-ஸ்ரீம்-ஐம்-மென்றுகட்டுவாய்நீ
மெய்த்திட்டயானதொருவறுகோணத்தில்
வேதாந்தவட்சரத்தைவிளம்பக்கேளு
பெரய்த்திட்டுப்போகாது-ஐ-ம்-ஈ-ம்-கூம்
புகழுள்ள-ரம்-ஹாம்-மென்றுபோடே. ௪௨

போடவேமுக்கோணவிதழெட்டுக்குள்
போடுகிறவட்சரத்தைப்புகலக்கேளு
ஆடவே-ரு-அ-ஒ-உ-வென்றுபோட்டு
அப்பனே-க-ளு-ய-ஐ யென்றுதானே

கூடவேணுமென்றால்வேல்வட்டத்துள்
கூறுவேனிம்மென்றுமெட்டுப்போட்டு
நாடவேயிதழ்நுனியினுச்சிமீதில்
நாட்டுகின்றவட்சரத்தைநான்சொல்வேனே. சுரு

சொல்லுவேன்-சூம்-கூம்-றீம்-றும்-மென்றுதானே
சொற்பெரிய-தம்-வம்-யம்-பிம்-மென்றுபோடு
வெல்லுவேனென்றுமனம்பதறிடாமல்
விதித்துப்பாரிதழ்சக்திவட்சரங்கடன்னை
சொல்லுவேன்-கூம்-றீம்-தாம்-வாம்-வம்மென்று
சுருதியாம்-யம்-லம்-பிம்-மென்றுகட்டி
கொல்லுவேனென்றாலுங்கொல்லப்போமோ
கூத்துவன்றனுக்கிணையுங்குலைந்துபோமே. சுசு

போகுமோவாசலதிற்கிழக்குத்தொட்டு
பூட்டுகிறவட்சரத்தை புகலக்கேளு
ஆகுமே-ஸ்ரீம்-ரம்-பீம்-ஷம்-மென்றுதானே
அருள்பெருக-வம்-யம்-லேம்-ஹரீம்மென்றிட்டு
தாகுமேயாபானதேவதைகடன்னை
சக்கிரத்திலேவிதித்துதாக்கும்போது
வேகுமேயண்டமெல்லாஞ் சாபமிட்டால்
வேதாந்தபூரணியைப்பூசித்தோர்க்கே. சுஎ

பூசைவிதி.

பூசிக்கவேணுமென்றால் சொர்ணமீதில்
போக்கோடேயட்சரங்கள்புகழாய்க்கீறி
ஆசிக்கவேணுமென்றாலாத்தாடன்னை
அப்பனேபூசைசெய்யும்வகையைக்கேளு
வாசிக்குமைந்தர்களேபூமிதன்னில்
வளமாகத்தான்மெழுகிநெல்லுமிட்டு
நேசிக்கும்வாழையிலையதன்மேற்போட்டு
நேர்ப்பாகப்பச்சரிசிபரப்பக்கொட்டே. சுஅ

கொட்டவேயதின்மேல்வெள்ளிலைபரப்பிக்
கூடுமையஞ்சக்கரத்தைவைத்து
ஒட்டவேயதின்பேரில்தாமரையின்பூவை
ஓகோகோசாத்திவிடுவுறுதியாக

முட்டவே கும்பமதிற்சலத்தைமோந்து
முப்புரிநூல்தனைச்சுற்றி மாவிலையுஞ்சாத்தி
கட்டவே வஸ்திரமுந்தேங்காய்வைத்து
கருணைதரவேணுமென்றுமஞ்சள்சாத்தே. சஎ

சாத்தவே யக்ஷரத்தையதின்மேலோட்டி
தன்மைபெறச்சுகந்தமணைநிறையச்சாத்தி
காத்தருளவேணுமென்றேதர்ப்பைதன்னை
கட்டியேமுக்கோணம்போலச்சாத்தி
சேர்த்தருளவேணுமென்றேயுன்னிடத்தில்
திரிபுரைக்குப்பாற்பழங்கள்பலகாரங்கள்
பாத்தருளவேணுமென்றுதேவிமுன்பு
பரிவாகவாமம்வைத்துப்பூஜைபண்ணே. சஅ

பண்ணவே தேங்காயையுடைத்துவைத்து
பரபானமத்தனையும்படைத்துமீந்த
துண்ணவேமுப்பூவின்சுன்னந்தன்னை
யுறுதிபெறவவளுடையமடியில்வைத்து
கண்ணவேபரிமளங்கள்கஸ்தூரிவகைகள்
கருணைபெறத்தான்சாத்திசொல்லக்கேளு
ஒண்ணவேஎன்தாய்க்குதூபதீப
மென்பதுதானுங்கொடுத்துசொல்லக்கேளே. சகூ

கேளடாமேளவாத்தியத்தினாலுன்
கிருபைதரவேணுமென்றுதியானஞ்செய்து
கோளடாவாராமலாத்தாள்பீசங்
கூறுவேன் ஐயுங்கிலியுஞ்சவ்வுமென்று
வாளடாசவ்வுங்கிலியும்ஐயுமென்றுவாக்கு
வாபரமேஸ்பரிவருகவருகவென்று
பாளடாபோகாதுதியானஞ்செய்நீ
பரிவாகவாயிரத்தொண்ணூறுத்தான்போடே. ரு0

போடவேயென்தாயாரபிராமிதானும்
பொங்கியேயானந்தம்பொழிவாள்பாரு
ஆடவேயவளுடைகூத்தையெல்லாம்
அறைகிறேனுனுமதையறிந்தமட்டும்

கூடவேயென்னிடத்திற்குடியாய்வாழும்
கூற்றுவனாற்றமைப்பணிந்தகொடுமையாலுந்
தேடவேயுன்னைப்போலெங்களுக்கு
தெய்வமதுவேறன்றோதேவியென்னே. ௫௧

எண்ணவேஎன்றாயாரிருந்தவீடு
யேழைமதிபோகாதாளென்னைப்பெற்றாள்
உண்ணவேநவகோணந் தன்னில்வாழும்
ஓகோகோவவளுடையரூபந்தன்னை
நண்ணவேயென்னாலேசொல்லப்போமோ
நந்தாந்தரூபியவள்நாட்டந்தன்னை
சொன்னவரும்புத்தியிலேயதிகமப்பா
சொற்பெரியாள்வாமியவள்ரூபந்தானே. ௫௨

தானென்றபுத்தியிலேயிவளைப்போலே
சார்த்தியடாஐவரையுமாண்டதேவி
ஊனென்றஉலகமதிற்குடியாய்வாழ்ந்த
வுத்தமியாளம்பரத்திலாடுஞ்சோதி
பானென்றமதிதனையும்பிறையாய்ச்சூடி
பாதாளச்சக்கரமும்படைத்தரூபி
நானென்றமதியமுதமீந்தாள்பாரு
நாதாந்தபிரணவத்தின்நாட்டந்தானே. ௫௩

தானென்றவவள்பதத்தில்மனதைவைத்து
சதாநித்தம்பூசைபண்ணிதாசனாகி
வானென்றமவுனவெளிஞானந்தன்னை
வசனித்தாளெந்தனுக்குமாயரூபி
கோளொன்றும்வாராமலென்னையாண்ட
கொடுஞ்சூரிநிட்டூரிகொடியசாமி
பாழொன்றுமாகாதுவிவளைக்கண்டார்
பரனுனதுவசமாவார்பாருபாரே. ௫௪

பாரேநீயவளுடையதொழிலைக்கேளு
பருவமுடனைவரையும்பலகையாக்கி
நேரேநீமதிகம்பங்கால்கணாட்டு
நெட்டுவளைசதாசிவத்தையதிலேபோட்டு

பாரேசீரவிமதியும்பஞ்சாய்ப்பேட்டு
பன்னிரண்டுராசியையும்வடமாய்க்கோர்த்து
சேரேசீசேடனைத்தான்மெத்தையாக்கி
செழுஞானவூஞ்சலிலே சென்றாள்பாரே. ௫௫

பாரப்பாவூஞ்சலிலேயிருந்துகொண்டு
பரமசிவனடிவரப்பார்த்தாள்பாரு
காரப்பாவவராமொட்டைப்பார்த்து
கருத்துடனேதானழைத்துமடியில்வைத்தாள்
பேரப்பாவண்டமெல்லாமிவளேயாண்டாள்
பேதையடாவிளங்கண்ணிபெதும்பையாகு
கூறடாவென்றாலுங்கூறப்போமே
கொடியிடையாள்சகதியதுகோலந்தானே. ௫௬

கோலமெல்லாமிவளுடையகோலமல்லால்
கொண்டவனையம்பலத்திலாடச்சொன்னாள்
ஜாலமெல்லாமென்தாயார்ஜாலமல்லால்
தானுமதுவேறுண்டோசராசரங்கடன்னிற்
பாலமெல்லாங்கடந்துவெளியம்பரத்தினின்ற
பரஞ்சுடரேநிற்குணமேபண்புள்ளானே
காலமெனும்பிறப்பிறப்புங்கடந்துநின்ற
காரணியேபூரணியேகனியேயென்னே. ௫௭

என்னவேயுன்னையுந்தான்பூசைபண்ண
வீசனால்முடியாதுவெவ்வராற்கூடும்
மண்ணெனவும்விருக்ஷமுதற்சராசரங்களெல்லா
வானெனவுமக்கினியின்மயமுமாகி
கண்ணெனவுமொளியாகியமுதமாகிக்
காமகளாரூபமுமாய்க்கருத்துமாகி
பெண்ணெனவுநின்றதொருவென்தாயாகி
பேரிளம்பெண்ரூபமுமாய்ப்பெற்றாள்பாரே. ௫௮

பாரப்பாவிவளைப்போலெவர்களுக்கும்
பாருலகிற்கிடையாதுபார்ப்போர்க்கேழை
சேரப்பாவிவளைநான்காணும்போது
சிறுபிள்ளையைந்துவயதுள்ளதேவி

ஆரப்பாவாத்தாளையிப்போகண்டால்
அதிலேயுந்தான்சிறுபிள்ளையாவாளப்பா
காரப்பாவிவளுடையபாதந்தன்னை
காணுமலென்ஞேருங்கலங்கினுரே. ௱௯

கலங்கையிலேபூரணியும்-ஆ-ஊ-வென்று
சுகட்டினுள்சத்தவொலிநாதந்தன்னை
மலங்கியேமவுனத்திலிருந்துகொண்டு
மாசற்றசோதிதனைமனதில்வைத்து
கலங்கியெனுமெட்டெழுத்தின்முடிவினின்ற
சச்சிதானந்தவெள்ளத்தாயார்தன்னை
குலுங்கியதோராட்டமெல்லாந்தேடிப்பார்த்து
கூகூவென்றவருமுறையிட்டாரே. ௱௰

முறையிட்டசத்தமதைக்கேட்டபோது
முக்குணத்திமுன்பின்னுய்முழித்துப்பார்த்து
கறையிட்டவானந்தவெள்ளம்பொங்கி
கருணைதந்தோமெனவழைத்தாள்கையினாலே
புறையிட்டவாத்தாளைத்தொழுதுபோற்றி
பாதமதிறபணிந்தார்களவர்தாமும்
குறையிட்டகுறைகளெல்லாந்தான்றவிர்த்துக்
கூப்பிட்டுவமுதமதைக்கொடுத்தாள்பாரே. ௱௰௧

கொடுக்கையிலேதான்வாங்கியமுதமுண்டு
குறிப்பாகவவள்பதத்தைமனதில்வைத்து
அடுக்கவேயாதாரவெளியிற்சொக்கி
ஆத்தாளுடையருமாயறிவாரென்று
நடுக்கவேமனதுதான்பேதியாமல்
நான்சொன்னபடியேநீபூசைசெய்வீர்
கொடுக்கவேவேணுமென்றுஆத்தாள்தானுங்
கூப்பிட்டுமுப்பூவைக்கொடுப்பாள்பாரே. ௱௰௨

பாரேநீயவள்பதத்தைப்பூசைபண்ணி
பன்னீருஞ்சந்தனமுங்கலந்துகொண்டு
வாரேநீகும்பத்திற்சொரிந்துபின்னும்
வண்மையுடனேமத்தியிற்துதியைச்செய்து

சேரேநீவில்வத்தாலர்ச்சனையுஞ்செய்து
சித்திக்கவேணுமென்றுதீபங்காட்டு
வேறேநீமனமொன்றிற்பாய்ந்திடாமல்
வேதாந்தசத்தியைநீபூசைபண்ணே. ௬௩

பூசைசெய்துமுப்பூவின்சுண்ணந்தன்னை
புகழ்பெறவேயொடுக்கமதிலடக்கஞ்செய்து
ஆசைகொண்டப்பாத்திரங்கள்வழக்கமாகி
ஆத்தாளைப்பூசைசெய்துவருளைப்பெற்று
பாஷையெனும்பரிபாஷைகருக்களெல்லாம்
பாடுவேன்தனித்தனியேசரக்குவேதை
பேசையிலேயிக்கருவைச்சொன்னையானால்
பிளந்தெறியுமுன்சிரசும்பேணிப்பாரே. ௬௪

சாரமெழுகுசெய்யும்விபரம்.

பாரப்பாமுப்பூவின்சுண்ணந்தன்னைப்
பணம்போலத்தானெடுத்துச்சொல்லக்கேளு
ஆரப்பாசாரமதுபலந்தானென்று
அப்பனேவாய்நீராலரைத்துக்கொண்டு
காரப்பாவத்திப்பால்கவசங்கட்டி
கைமுறையாய்த்தீவாட்டமெழுகாய்ப்போகுஞ்
சேரப்பாசொர்ன்னமென்றரேக்குதன்னைச்
சென்றதின்மேற்சுத்திநீதிரும்பிவாட்டே. ௬௫

சாரம் நவாச்சாரம் சொர்ன்னம் தங்கரேக்கு.

வாட்டையிலேமெழுகதுவாம்ரேக்குதன்னை
யிருவிநன்றாயுட்கொண்டுவாங்கும்பாரு
ஓட்டையிலேரேக்கதனைப்பலமரையேதின்றால்
உறுதிபெற்றமெழுகதனையுரைக்கக்கேளு
ஆட்டையிலேயாத்தாளைப்பூசைபண்ணி
அப்பனேமதிதனிலே நூற்றுக்கொன்று
நாட்டையிலேயேழரையுமாகுமாகும்
நந்தீசர்சொன்னபடிநாம்சொன்னோமே. ௬௬

சொன்னதொருசாரமதுவின்னங்கேளு
சூட்டுவேன்முப்பூவைவிராகனென்று
எண்ணமுள்ளசாரமதுபலந்தானென்று
யெடுத்துநீயண்டமென்றவென்கருவினாலே

முன்னமுள்ளகுருவதனையாட்டிக்கொண்டு
முழுதுமதைக்கவசமிட்டுரவியில்வைத்து
அன்னமெனுமுன்றெருவிற்புடத்தைப்போடு
அப்பனேநீயறியதுசுன்னமாமே. சாஎ

ஆமென்றசாரமதையெடுத்துக்கொண்டு
அதிற்பச்சைசாரமதுமூன்றுபங்கு
போமென்றவெள்ளருக்கன்பாலாலாட்டி
புகழ்பெறவேபீங்கானில்வழித்துவப்பி
நாமென்றபனியில்வைக்கச்சயநீராகும்
நயம்பெறவேகுப்பிதனிலடைத்துக்கொண்டு
தாமென்றசாரமதுபலந்தானொன்று
தாக்கடாதீயைவைத்துசுருக்குதானே. சாஅ

தானென்றசாரமதுகறுத்துபோட
தட்டுண்டுசுட்டமடாசாரந்தானுந்
தேனென்றசாரமதுசெவந்துகாணுஞ்
சிவசிவாசெந்தூரமென்சொல்வேன்
ஊனென்றசாரமதுகல்வத்திட்டு
உத்தமனேதாளகமுங்கொதிகூட்டி
பானென்றகெவுரியதுரேக்கைத்தானும்
பலமதுதான்காலாகப்பார்த்திடாயே. சாகூ

பார்த்துநீகல்வமதிலிட்டுக்கொண்டு
பகரவேமுன்செயநீர்தன்னாலாட்டி
சேர்த்துமேசாரமதைத்தானரைத்துந்
திரும்பவதைவழித்துநீவட்டுபண்ணிக்
காத்துமேலாடாமல்ரவியில்வைத்துக்
காய்ந்தபின்புகாடையெருபுடத்திற்போடு
ஆத்துமேசெந்தூரமென்னசொல்வேன்
அரஹராவாதமிதிலமைந்தவாறே. எய

வாறானசெந்தூரந்தனையெடுத்து
மைந்தனேயாத்தாளைப்பூசைசெய்து
ஆறானசெம்பதனில்நூற்றுக்கொன்று
அணைந்திடவேமாற்றுமாறரையுங்காணுந்

கூறினவெள்ளியிலைம்பத்துக்கொன்று
 கொடுத்திடவேபத்தரையுங்குறையாதப்பா
சீரானசெந்தூரங்குன்றியுண்ணு
 திரேகமதுவலுத்துவிடுந்திறஞ்சொன்னோமே. ௭௧

சொன்னதொருசெயநீரின்னங்கேளு
 சூடனதிற்பலமொன்றுசுருக்குப்போடு
கண்ணவேகரைந்ததுவுஞ்சுன்னமாகும்
 காட்டாதேயொருவரிடங்கடக்கவைத்து
எண்ணமுள்ளவெடியுப்புநாலாங்காச்சல்
 எடுத்துநீபலமதிலேசுருக்குத்தாக்க
கொன்றுதான்போடுமடாவெடியுப்பைத்தான்
 கொடியதொருசுண்ணம்புகூட்டந்தானே. ௭௨

கூட்டமென்னவீரமதிற்பலந்தானொன்று
 குழைத்துநீபூசிடுவாய்முப்பூச்சுண்ணம்
நாட்டமென்றசெயநீராலரைத்துப்பூசி
 ரவிமுகத்தில்மூன்றுநாள்காய்ந்தபின்பு
வாட்டமில்லாசெயநீரால்சுருக்குப்போடு
 மைந்தனேசாமமதுபோட்டாயானால்
காட்டமென்றசுன்னமதையென்னசொல்வேன்
 கரையடங்காவேதையடாகண்டுபாரே. ௭௩

கண்டுமேசுன்னமதுமூன்றுமாச்சு
 கதிரென்றும்மதியென்றுங்கனல்தானென்றும்
பண்டுமேயுரைத்தவொருயிதுதானப்பா
 பாடினோரவரவர்களனந்தம்பேரைத்
தொண்டுபண்ணித்திரிந்தாலுஞ்சொல்லார்சொல்லார்
 சூட்சமடாயிதின்பெருமைசொல்லப்போமோ
மண்டுமேயண்டமதிற்றீயாமெங்கும்
 மயங்குமேசராசரங்கள்மருவிப்பாரே. ௭௪

மருவியதோர்சுன்னமென்றசுன்னந்தன்னை
 மைந்தனேவகைவகைக்குக்கழஞ்சிவாங்கி
அருவியெனுஞ்செயநீரிற்கலக்கிக்கொண்டு
 அப்பனேமுப்பூவில்விராகன்போடு

வெருகியோரவிமுகத்தில்முகூர்த்தம்வைத்தால்
வெகுண்டெழுந்துபோகுமடா்செயநீர்தானும்
சுருதியெனுமிதின்பெருமைசொல்லப்போமோ
சூட்டுவோம்பனியில்வைத்துசெயநீர்வாங்கே எரு

வாங்கியேகுப்பிதனிலடைத்துக்கொண்டு
வாய்பலப்பக்கல்லதனல்மூடிப்போடு
தாங்கியேபலமொன்றுவீரந்தன்னை
தனிசெயநீர்தனித்துவைத்துவாட்டுவாட்டு
பாங்கியெனும்வீரமதுமெழுகாய்ப்போகும்
பராபரைக்குமுதல்நாதம்பாருபாரு
தூங்கியேதிரியாதேரேக்கைச்சுத்தி
துப்பறவாய்நெருப்பூதிவாட்டுவாட்டே. எசு

வாட்டையிலேரேக்கதனைச்சுழற்றிவாங்கு
வமைந்தனேகாற்பலந்தான்செலுத்திப்போடு
ஊட்டையிலேரேகித்துமெழுகாய்ப்போகும்
உத்தமனேயிதன்பெருமையுரைக்கக்கேளு
நாட்டையிலேவெள்ளிதனில்நூற்றுக்கொன்று
நாட்டிடவேமாற்றதுவும்நாலேந்தாகும்
தேட்டையிலேயிதனைவிடத்தேட்டுமுண்டோ
சிவசிவாயிதன்பெருமைசெப்பொணாதே. எஎ

வீரமெழுகு.

ஒண்ணனவீரமதையின்னங்கேளு
ஓகோகோபலமதுதானெடுத்துக்கொண்டு
கண்ணனசெயநீரிற்றேய்த்துநீயுங்
கடுரவியிற்போட்டுவிடுதினந்தான்மூன்று
பண்ணனகெந்தகமும்பலந்தான்ரெண்டு
பற்றிநின்ற*விடந்தீஞ்சான்பலமிரண்டு
குண்ணதேதானரைக்குகைபோற்பண்ணி
கொடியதொருவீரமதைவைத்திடாயே, எஅ

வைத்துமேசீலைமண்ணுயேழுஞ்செய்து
மைந்தனேயெருவைந்திற்புடத்தைப்போடு
பொய்த்துமேபோகாதுகட்டிப்டபாரும்
பேர்க்கோடேயிதையெடுத்துச்சொல்லக்கேளு

* விடந்தீஞ்சான்-கொல்லேப்பல்லி.

ஐந்துமேபோகாதுகல்வத்திட்டு
அப்பனேதாளகமுஞ்சிலையுங்கெஞ்சி
செத்துமேகவுரியைத்தான்கூடப்போட்டு
சேர்சூததங்கமென்றேர்க்குபோடே. (எக)

போடவேவெடியுப்புநாகந்தானும்
பேட்டிடுவாய்களஞ்சியதுஅரைதான்வீதம்
நாடவேயிதுவெல்லாமொன்றாய்ச்சேர்த்து
நாட்டுவாய்கல்வமதிலரைக்கக்கேளு
ஆடவேமுருக்கம்பூச்சாற்றினாலே
அப்பனேநாற்சாமமரைத்திட்டேதான்
சாடவேரவிமுகத்திலுலரவைத்து
தன்மைபெறக்காசியென்றமேருக்கேற்றே. (அய)

எரிப்புக்குத்திட்டம்.

ஏற்றிலேவாலுலகையிற்றுளிவைத்து
இதமாகப்பொடிமணலைக்கொட்டுகொட்டு
ஆற்றியேநான்குவிரலாழங்கொட்டி
அப்பனேயதின்மேலேகுப்பிவைத்து
நாற்றிசைமணலிட்டுப்பந்தனஞ்செய்து
நடுமூக்குயிருவிரல்தான்தெரியவிட்டு
காற்றசையாவிடந்தனிலேயடுப்பையிட்டு
கருவெல்லாம்விரகதனாற்றீயைமூட்டே. (அக)

மூட்டியேதீபம்போலெரிநேர்ப்பாக
முதற்சாமம்தான்கடந்துவிரண்டாஞ்சாமம்
ஆட்டியேயிருவிறகுகமலம்போலே
அப்பனேசாமமதுகடந்துதானால்
சூட்டியேநால்விறகுயிருசாமந்தான்
தோணமேதானெரித்துசொல்லக்கேளு
மாட்டியேராக்காலமாறப்போடு
மைந்தனேபணிரெண்டுசாமந்தானே. (அஉ)

தானென்றவெரிப்புக்குவிறகைக்கேளு
தன்னுடையதட்டைவிரற்பிரமாணந்தான்
வானென்றவிறகுக்குளிங்கேளு
மைந்தனேநாற்சாணுமட்டமாக்கி

ஊமென்றவெடியுப்புதிட்டஞ்சொன்னேம்
ஓகோகோசெந்தூரத்துண்மைகேளு
மானென்றகுப்பியைத்தானுன்காராவில்
மைந்தனேயெடுத்துவராவைத்திடாயே. (௮௩)

எடுத்துமேயாத்தாளேபூசைபண்ணி
யேகாந்தவைரவனைத்தியானஞ்செய்து
கொடுத்ததொருதொழில்களெல்லாஞ்சித்தியாக
கோணவேவேணுமென்றுதொழுதுபோற்றி
அடுத்திருந்துவென்னைகாக்கவேணுமென்று
அர்ச்சித்துக்குப்பியைத்தானுடைக்கும்போது
புடத்திருந்தகுப்பியைத்தானுடைக்கும்போது
பூரணமாஞ்செந்தூரம்புகலக்கேளே. (௮௪)

கேளப்பாசெந்தூரமருணன்போலாங்
கிருபைபெறத்தாவெடுத்துவைத்துக்கொண்டு
கோளப்பாவாராமற்குன்றியுண்ணு
கொடுஞ்சுறுக்குகாயசித்திகூறப்போமோ
வேளப்பாயிதையெடுத்துவைத்துக்கொண்டு
வெள்ளிதனக்காயிரத்துக்கொன்றுபோடு
சூளப்பாமாற்றதுவுமிருபதாகுஞ்
சொல்லுவேனிதன்பெருமைபின்னந்தானே. (௮௫)

லிங்கக்கட்டுமெழுகு.

தானென்றசெம்பினிமேனூற்றுக்கொன்று
தான்கொடுக்கமாற்றென்னவிருபதாகும்
வானென்றகதலோகவினங்களெல்லாம்
மாட்டிடவேயெழுமையுங்குறையாதப்பா
கோனென்றவிடைக்காட்டாரிந்தகற்பங்
கொண்டல்லோர்கோடியுகம்வாதம்பார்த்தார்
தேனென்றமொழியாள்தானெனக்குச்சொல்லி
செப்பினேன்கமலமுனிதனக்குத்தானே. (௮௬)

நானென்றலிங்கமதுகம்பியாக
நன்றாகத்தெரிந்தெடுத்துபலமொன்று
தானென்றசெயநீரால்சுறுக்குப்போடு
தயவாகசாமமதுபோட்டாமானல்

வாமென்றலிங்கமதுகட்டிப்போகும்
மைந்தனே * குருக்குவிரைதைலம்வாங்கி
ஊமென்றலிங்கத்திற்சுருக்குப்போட
ஓகோகாமெழுகாகுமுண்மைதானே. (௮௭)

உண்மையென்றமெழுகதனையெடுத்துக்கொண்டு
ஒருகழஞ்சிரேக்கதனையெடுத்துக்கொண்டு
நன்மையென்றரவிமுகத்தில்வைத்தாயானால்
நாள்மூன்றில்நின்றுவிடும்ரேக்குதன்னை
வண்மையெனவிதையெடுத்து * மதியிற்றுக்கு
மைந்தனேநாதனுக்கொன்றுதானும்
தண்மையென்றதங்கமதுவென்னசொல்வேன்
சரிமாற்றுபத்தரையுந்தப்பாவாறே. (௮௮)

வாறுகேளிம்மெழுகைக்குன்றிபுன்னு
மைந்தனேகோடிவகையிறுத்துப்பாரு
ஆருமேயிம்மெழுகைச்சொன்னாரில்லை
அரனெனக்குசொன்னவித்தையுனக்குசொன்னேன்
சேருமேவித்தைவதுவாலம்போலச்
சேல்விழிகளருணனைப்போற்சிவந்துகாணும்
பாருமேமெழுகினதுதிரந்தன்னைப்
பாடிவிட்டேனன்றாற்றிலின்னங்கேளே. (௮௯)

லிங்கப்போக்கு.

இன்னமுந்தான்சொல்லுகிறேன்லிங்கப்போக்கு
யென்குருவாம்புசுண்டரதுகிருபையாலே
சொன்னதொருலிங்கமதுபலந்தானொன்று
கூட்டுவேன்முன்போலக்கட்டிக்கொண்டு
தண்ணவேகெந்தகமுங்கெவுரிதுத்தம்
தாளகமுஞ்சிமிளையுடன்சூதந்தானும்
பண்ணவேதங்கமென்றரேக்கைதானும்
பலமரைதான்வீதமடாசேர்த்திடாயே. (௯௰)

சேர்த்திட்டுக்கல்வத்திற்பொடியாய்ப்பண்ணி
செந்துருக்கம்பூச்சாற்றைதிரளாய்வார்த்து
கைத்திட்டமாகவொருநான்குசாமம்
கடுகவரைமறுநாளிற்சொல்லக்கேளு

---

* குருக்குவிரை-பிரமத்தண்டுவிரை.
* மதியில்-வெள்ளியில்.

வைத்திட்டசெயநீரால்ஜாமனான்கு
வரிசைபெறத்தானரைத்துச்சொல்லக்கேளு
பொய்த்திட்டுப்போகாமலுலரவைத்துப்
பொடிபண்ணிகாசியுடமேரும்போதே. (௧௧)

ஏத்தவேமுன்போலத்தாளிக்குள்ளே
என்மகனேமணலிட்டுக்குப்பிவைத்து
ஆத்தவேமுன்போலத்தீயைமூட்டு
அப்பனேபனிரெண்டுசாமமானால்
மாத்தவேதீயதனைநிறுத்திப்போடு
மறுநாளிற்குப்பியைநீவெளியில்வாங்கே
காத்தருளவேணுமென்றுதேவிமுன்னே
கடுகமென்றசெந்தூரம்வைத்திடாயே. (௧௨)

வைக்கவேதேவியதுசக்கிரத்தின்முன்
வாமம்வைத்துப்பூசைபண்ணிமனதுகூர்ந்து
மெய்க்கவேரிஷிசித்தர்முனிவர்க்கெல்லாம்
வேதாந்தபூரணியைதியானஞ்செய்து
தைக்கவேசொர்னமென்றசிமிழில்வைத்து
தானெடுப்பாய்செந்தூரம்விராகனொன்று
கைக்கவேசெம்பதனைச்சுத்திசெய்து
கனகமதையைந்நூற்றுக்கொன்றுபோடே. (௧௩)

போடவேமாற்றதுவும்பதின்மூன்றாகும்
போக்கோடேவெள்ளியிலாயிரத்துக்கொன்று
நாடவேமாற்றதுவுமிருபதாகும்
நாதாந்தசத்தியவளிட்டத்தாலே
சாடவேலிங்கமென்றசெந்தூரத்தைச்
சொல்லவேகுன்றநீயுண்டானால்
வாடவேவேண்டாங்காண்காயசித்தி
மைந்தனேகெவுனசித்தியாகுந்தானே. (௧௪)

துருசுச்சுன்னம்.

தானென்றதுருசினதுசுன்னங்கேளு
சமுசயங்களெண்ணாதேதாயைப்பூசி
வரனென்றதுருசமதுபலந்தானொன்று
மைந்தனேகொண்டுவந்துசொலலக்கேளு

*பானென்றஜெயநீரிற்றோய்த்துத்தோய்த்து
பத்துநாளிரவிதனிற்பொட்டாயானால்
கானென்றசுண்ணமதையென்னசொல்லோம
கடுரவியில்வைத்தவுடன்சுண்ணமாமே. (சுரு)

*பானென்றது-சூரியன் நெருப்புத்திராவகம்.

சுண்ணமென்றதுருசியைத்தானெடுத்துக்கொண்டு
சொலலுவேன்கலவத்திற்கொட்டியாட்டி
மூன்னமென்றகருவதனிற்காசபோடு
மூர்க்கமென்றசெயநீரைவிட்டேயாட்டு
வண்ணமென்னகாரமதையென்னசொல்வேன்
மைந்தனேபட்டவிடம்வெந்துபோகும்
கண்ணேவெயிச்சுண்ணந்தனையெடுத்து
காளகண்டவயிரவனைப்பூசைபண்ணே (சுசு)

வைரவன்பூசை.

பூசையிலேவைரவன்பூசையைக்கேள்
புகழ்பெரியநாதாக்கள்சொல்லார்சொல்லார்
ஆசைகொண்டுபூசையதுசெய்யவென்றால்
அப்பனேயென்கோணமிட்டுத்திதிரு
பாஷைதனிற்கோடியுண்டிலக்கோயில்லை
பாடினதோர்சக்கரங்களனேகமுண்டு
பேசையிலேயித்தொழிலைப்பேசுவாரோ
பிரலாபஞ்சொர்னமென்றம்பீசந்தானே. (சுஎ)

* பீசம்-அக்ஷரம்.

தானேதான்சொர்னமென்றவயிரவத்தியானஞ்
சாற்றுகிறேனட்சரங்கள்சரிநின்றுட
வானேதான்சொலித்ததுபோவ்வாதவித்தை
வகையானவஷ்டகற்மசித்தியெல்லாஞ்
சேனேதானனேகமுண்டுகற்மவித்தை
செய்வதற்குச்சொர்னவயிரவனைப்பூசி
நானேநீயென்றுசொல்லென்கோணத்துள்ளே
நாட்டுவாய்சக்கரத்தைநாட்டுவாயே. (சுஅ)

நாட்டுவாயீநடுமையம்ஹ்ரீமென்றுபோடு
நிலமானகீழ்த்திசையில்யமமென்றுபோடு
ஊட்டுவாயக்கினியின்மூலைதன்னி
லுத்தமனேஇம்மென்றுவதிலேபோடு
நாட்டுவாய்தென்றிசையிலம்மென்றுபோடு
கருவானமூலையிலேவம்மென்றுபோடு
சூட்டுவாய்மேற்றிசையிலிய்மென்றுபோடு
சொற்பெரியகுபேரனிலேஉமமென்றுபோடே. (௬௬)

போடவேவடதிசையில்ஸ்தம்மென்றுபோடு
போக்கோடேமூலையிலேகூம்உம்மென்றுபோடு
நாட்டுவேயதின்மேலேரண்டுவரையிட்டு
நன்மைபெறவாசல்களும்நான்குவிட்டு
கூடவேவேணும்மன்றுசக்கரந்தான்
குறிப்புடனேதங்கமென்றதகட்டிற்கீறி
ஆடவேவேணுமென்றுதொழில்கட்பூட்டி
அர்ச்சனைக்குவிபரமதையறிகிறேனே. (௱)

அறைகிறேன்மந்திரம்லும்சொர்ணவயிரவா
அப்பனேயிப்படிநீதியானஞ்செய்ய
பறைபுறேனுயிரத்தெட்டுருத்தான்போடு
பகிரண்டவயிரமுஞ்சித்தியாகும்
அறைகிறேனென்றுசொன்னேன்மந்திரத்தோடு
அப்பனேயட்டசித்துவஞ்சனமுமப்பா
கறைகின்றவுப்புமுதலவாதப்போக்குங்
கைகண்டசித்தியடாகண்டுபாரே. (௱௧)

கண்டுமேசக்கரத்தைமுன்னேவைத்து
கடினமாய்கியானத்தைசெய்துக்கொண்டு
கண்டுமேசொன்னபடிசெய்தாயானால்
பாதங்கள்சொல்லுகிறேனின்னங்கேளு
கண்டுமேவாயமொடுசுத்திவைத்து
கனகம்போற்பூசையைநீசெய்யவேணும்
அண்டுமேவண்ணமொடுபலகாரங்கள்
அதிகமாய்வடபருப்புபாணககங்கள்
பண்டுமேயெனையாண்டகுருவேயென்று
பாக்கிலையுந்தேக்கிலையிற்படைத்திடாயே. (௱௨)



படைத்துமே தீபமொடு தூபங்காட்டி
பரமகுருநாதனைப் பணிந்துபோற்றி
மடைத்தனமாய்த் திரியாதே வயிரவத்தின் பூசை
மறந்துவிட்டா லெத்தொழிலு மயக்கமாகும்
அடைத்ததொரு வட்சரங்க ளனேகமுண்டு
அந்தந்த விடங்களிலே யாருஞ்சொல்லார்
கடத்ததொரு மறப்பில்லாதுங்களுக்கு
சாற்றுவேன் வயிரவத்தின் பூசைதானே. (௩௩)

தானென்ற வயிரவர்க ளெட்டுபேரும்
தனித்துமே சக்கரத்தில் நின்றுபூசை
வானென்ற அட்டமா சித்தியெட்டும்
மைந்தனே வயிரவர்க ளெட்டுபோல
கோனென்ற நீயிவர்க டன்னைபூசி
கூடிவரு மட்டசித்திகைக்குள்ளாகுந்
தேனென்ற வயிர்தம டாவிந்த பூசை
தேவிசொலலநாம் செய்த திறமிதானே, (௩௪)

திறமான பூசையிலே மனதை வைத்து
சித்திதரவேணுமென் றுதியானஞ்செய்து
உறமான உன்மனதை பேதியாதே
ஒகோகோருத்திரனு முண்மைசொல்வார்
பரமான பரமகுருதன்னை நீயும்
பணிந்துமே பாத்திரங்கள் வழக்கச்செய்து
சரமானசூரியனிற் பூசைபண்ணி
தான்வாங்கு தூரிசினதுசுண்ணந்தானே. (௩௫)

சுன்னமென்ற சுன்னமதைப் பதனம்பண்ணி
சூட்டுகிறே னிதையெடுத்துத் தொழிலுமாட
கன்னமென்ற கன்னக்கோலி துவுமாகுங்
காட்டுவேனி தின்பெருமைகைக்கொள்ளாது
சொன்னதொரு சூதமொருபலந்தானென்றில
சூட்டுவேன் துருசினது சுன்னந்தானும்
என்னவே பணவிடைதா னெடுத்துக்கொண்டு
இதமானசூதமதி லிட்டுத்தாக்கே.. (௩௬)

தாக்கவேவாய்நீராகவிட்டுத்தாக்கு
தட்டுண்டுசூதத்துசட்டிப்போகும்
பார்க்கவேவழித்தெடுத்துக்குகையில்வைத்து
பக்குவமாய்மூன்றெருவிற்புடத்தைப்போக்கி
சேர்க்கவேமணியதுதான்கதிர்போல்வீசும்
சிவசிவாரசமணியின்திறமைதன்னை
ஆர்க்கவேயாராலுமறியப்போமோ
அரனுடையவிந்துவதினுண்மைதானே. (௱எ)

தானேதானின்றதொருசூதந்தன்னை
சாற்றுகிறேன்கெவுனமதிற்றூண்டியோட
மானேதான்தரித்தசிவன்விந்தின்போக்கை
மறைத்தார்கள்சித்தரெலாம்வாய்பேசாமல்
சேனேதான்மெத்தவுண்டுபூமிதன்னில
சிவசூதங்கொடித்தாக்காண்மெத்தநன்று
ஊனேதான்பிறந்தெடுத்தசூதமானால
உயர்த்தியடாமெத்தநன்றவுண்மைதானே. (௱அ)

கருவூமத்தின்விபரம்.

உண்மையென்றசூதமதுகிடையாவிட்டா
லுத்தமனேபரங்கிவைப்புலிங்கசூதந்
தண்மைபெறத்தானெடுத்துமணியாய்ச்செய்நீ
தாண்டுமடாயண்டவகைகிணற்றிறனும்
வண்மைபெறமணியெடுத்துசாரணையைத்தீர
மாட்டுகிறேனுதாக்கண்மறைப்பையெல்லாம்
பண்மைபெறச்சொல்லுகிறேன்கருவூமத்தம்
பாகமதையினுவிபரம்பாரும்பாரே. (௱கூ)

பாரேநீகருவூமத்தின்பாகமேதோவென்றாள்
பைங்கொடியாட்கெற்பமடாமூன்றுங்கெற்பம்
காரேநீகொண்டுவந்துகத்தியாலே
கடுகதுபோல்கண்டித்துச்சொல்லக்கேளு
சேரேநீகுடனைதுபலந்தானேந்து
திறமானவெண்காரம்பலந்தான்மூன்று
வாரேநீவெடியுப்புசாரஞ்சீனம்
வகைவகைக்குப்பலமொன்றுமாட்டிடாயே. (௱ய)

மாட்டியேயிண்டமதிலிரேகித்தேதா
    மைந்தனேயச்சட்டிக்குள்ளேவைத்து
ஆட்டியேவடுப்பெரிநீமெழுக்காய்போகும்
    அப்பனேயதையெடுத்துவைத்துக்கொண்டு
ஊட்டியேகவசமிட்டுமணிக்குத்தானம்
    உத்தமனேநூற்றிருபத்தொன்றுபோடு
காட்டியேகொடுக்காதேயார்க்கானாலும்
    கருவூமத்தின்கருவைக்காட்டொண்ணாதே. (கககூ)

ஆணையிட்டது.

ஒண்ணானகருவினதுவிபாஞ்சொன்னேன்
    உத்தமனேயிதின்விபரமொருவர்சொல்லார்
கண்ணானபேர்களுக்குச்சொன்னாயானால்
    கண்கெட்டுமுன்சிரசுவெடித்துபோகும்
என்னாணையென்றுமிகச்சாபமிட்டேன்
    இட்டதினார்பயந்தார்கள்சித்தரெல்லாம்
உன்னாணைபூசித்துவெடுக்கவென்றால்
    முறைசொன்னோரென்குருவும்புகுண்டர்தாமே. (ககஉ)

இரசமணிக்குசத்துஊட்டும்வகை.

தானென்றமணிக்குநீசாரணையைத்தீர்ந்தால்
    சத்துவகையூட்டுகிறவிபாங்கேளு
ஊனென்றபூநாகசத்துவொன்று
    உத்தமனேதாளகத்தின்சத்துவொன்று
வானென்றவுபசாங்களிருநூற்றுப்பத்து
    வகையானபாஷாணமறுபத்துநான்கும்
நானென்றவுப்புவகையிருபத்தைந்து
    நன்மையாகநவலோகமொன்பதுவுமாமே. (ககூ)

ஆகுமேமூலிகையின்சத்தோடொக்க
    அப்பனேநவமென்றபாஷாணந்தான்
போகுமேசத்துகளையெடுத்துக்கொண்டு
    புகழ்பெறியசூதமணிபலமொன்றுக்கு
தாகுமேகுகைதனில்வைத்துருக்கும்போது
    சரிசமனாய்க்கொடுத்துவிடுபூநாகச்செம்பு
வேகுமேபண்டமேலாமதியினாலே
    வெகுகோடியுருத்திரன்போல்விளங்குந்தானே. (ககச)

விளங்குதோரசமணிதானுருகும்போது
 விரவியிடுயிந்திரமாங்கோபச்செல்லை
முழுங்கியேதவளைப்போலுள்ளக்கொள்ளும்
 மூர்க்கமுடன்கோபமுண்டோமுறையாது
களங்கில்லாசத்துகளைப்பின்னலூட்டு
 கட்டுவேகமாகுமடாகெவுனத்துள்ளே
உளங்கவேமனிதனுசகுசங்குசத்தை
 யூட்டினால்கெவுனமதில்யோசையாமே, (ககரு)

ஓசையென்றால்வெகுவோசைசகிறேசை
 ஓகோகோமதயானைவோடும்வேகம்
மூசையிலேயடைந்திருந்தகாற்றப்போலே
 முழிக்குமுன்னைக்கோடிவரைமுழுதுந்தாண்டும்
பாஷையிலேபரிபாஷைகருக்களெல்லாம
 பாடிவைத்தேனின்னூல்தான்பதனஞ்சொன்னேன்
பேசையிலேயிப்பொருளைச்சொன்னயானால்
 பிசகுவருமுந்தனுக்குப்பேணிப்பாரே. (ககசு)

பாரப்பாவிம்மணிக்குவாத்தாள்பூசை
 பாங்குபெறச்செய்துகொல்லக்கேளு
சேரப்பாவயிரவன்றன்பூசையாலும்
 சித்தியடாயிதின்பெருமைசெப்பொணாது
ஆரப்பாவெனைப்போலசொன்னாரில்லை
 ஆச்சரியமணியோசையென்னசொல்வேன்
பேரப்பாபேற்றதெல்லாமிதுத்தின்பேறு
 பெருமையிதின்முடிவிசொலல்போகாதென்னே. (ககஎ)

இரசச்சிந்தூரம்.

போழுதிசத்தினதுசெந்தூரத்தைப்
 பூட்டுகிறேன்காயசித்திபொருளுண்டாக
வேகாதரசத்தினதுமணிதானென்று
 விளங்கியதோர்தங்கமென்றுகெவுரிதானுந்
சாகாதநாகமொன்றுவிராகனென்று
 தண்மையாங்கந்தகந்தாளசமுங்கூட்டி
நோகாதவெடியுப்புநாலுஞ்சேரு
 தண்மையாம்பலங்காலாயவிதங்கூட்டே. (ககஅ)

கூட்டியேகல்வத்திலிட்டுக்கொண்டு
குமறவேமாதளம்பூச்சாற்றினாலே
ஆட்டியேநாற்சாமமானபின்பு.
அப்பனேரவியில்வைத்துபொடியாய்ப்பண்ணி
ஊட்டியேகாசியென்றமேரிற்றாலும்
உத்தமனே * வாலுகையின்மேலேவைத்து
மாட்டியேநீயெரிப்பாய்நான்குசாமம்
மைந்தனேயிராக்காலமாறப்போடே. (௧௧௯)

* காசி-காசிகும்மி.

* வாலுகை-அடுப்பு,

போடவேயிப்படியேமூன்றுநாட்டான்
புகழ்பெறவேபன்னிரண்டுஜாமமானால்
நாடவேநாலாநாளிறக்கிப்பாரு
நன்மையென்றசெந்தூரமென்னசொல்வேன்
தேடவேவருணன்போற்சிவந்துகாணுஞ்
சிவசிவாவிதன்பெருமைசெப்பொணாது
ஆடவேவேணுமென்றாலாத்தாள்மான்பு
ஆர்சித்துபூசைசெய்துவப்பால்வையே, (௧௨0)

வைக்கவேவடுவுக்குப்பூசைபண்ணி
மைந்தனேசெந்தூரங்குன்றியுண்ணு
மெய்க்கவேயுன்திரேகமென்சொல்வேன்
வெண்மதிபோலாகுமடாமண்டலத்தில்
தைக்கவேவெள்ளியிலாயிரத்துக்கொன்று
தானிடவேயிருபத்தைந்தாகுமாற்று
எய்க்கவேவேணுமென்றால்செம்புதன்னில்
யீந்திடுவாயைந்நூற்றுக்கொன்றுதானே, (௧௨௧)

தானென்றமாற்றதுவும்பனிரண்டாகும்
சாற்றுவேனிதன்விபரமின்னங்கேளு
பானென்றமதிபோலநவலோகங்கள்
பழுக்குமடாநூற்றுக்குவொன்றுதாக்கு
ஊனென்றவிதன்பெருமையாருஞ்சொல்லார்
உரைத்தேனேமனிதரெல்லாம்பிழைக்கவென்று
கானேனனென்றுசொல்லிவிட்டிடாதே
கருத்துகந்துவைந்நூறும்பாருப்பாரே, (௧௨௨)

பார்க்கவேசொல்லுகிறேனுகந்தன்னை
  பலம்பத்துதானெடுத்துசொல்லக்கேளு
ஆர்க்கவேசாரனீர்தன்னிலேதான்
  அப்பனேயைந்துமுருக்கிச்சாய்த்து
ஏர்க்கவேதானெடுப்பாய்கட்டிப்போகும்
  என்மக்காணு நத்தின்பெருமைகேளு
சேர்க்கவேகட்டியதோர்நாகந்தன்னைப்
  செப்புகின்றவிபரமதைச்செப்புறேனே, (௧௨௩)

செப்புகிறேன்கட்டியதோர்நாகந்தன்னை
  திரளவேபலமொன்றுகைக்குள்வைத்து
முப்புறமேதானெரித்த *வீசன்விந்து
  முண்மையென்றதங்கமடாபலந்தானென்று
தப்புகிறேனென்றுனுந்தப்பப்போமோ
  தாயுடையவிந்துவடாகெந்திதானும்
உப்பென்றவெடியுப்புநாலாங்காய்ச்சல்
  உறுதிபெறத்தானெடுத்துச்சொல்லக்கேளே, (௧௨௪)

* ஈசன்விந்து-இரசம்

கேளடாநாகத்தையுருக்கிக்கொண்டு
  கெட்டியாய்த்தங்கத்தையதிலேசேர்த்து
கோளடாவாராமற்கல்வத்திட்டு
  கொட்டினல்தூளதுபோலாகுமபாரு
பாழடாபோகாதுசரக்கெல்லாந்தான்
  பலங்காலதான்வீதமடாயெடுத்துக்கொண்டு
வேளடாயெரித்தசிவன்மூலிச்சாற்றில்
  விட்டரைப்பாய்சாமமதுநான்குதானே (௧௨௫)

*சிவன்மூலி-சிவனார்வேம்பு

தானென்றநால்சாமமரைத்தபின்பு
  தான்ரவியில்காய்ந்தபின்புசொல்லக்கேளு
மானென்றபொடியாக்கிமேருசேற்றி
  மைந்தனேவாலுகைபிலவைத்துநீயும்
கோனென்றமூன்போலவெரிநீயப்பா
  குமறவேபனிரண்டுசாமந்தீயை
பரனென்றேகுளிரவிட்டுநான்காணிற்
  பார்வதியைப்பூசைபண்ணியப்பால்வாங்கே (௧௨௬)

வாங்கியதோர்சிந்தூரமென்னசொல்வேன்
மைந்தனேகொஞ்சிவப்புகண்ணேகூசுந்
தாங்கியேதானெடுத்துக்குன்றியுண்ணு
தப்பாதுகாயசித்தியிதுவேயாகும்
ஏங்கியேதிரியாதேநவலோகங்கள்
என்னசொல்வேன்பத்தரைக்குயேறுமாற்று
பாங்கியெனுமென்தாயார்சொல்லநானும்
பரிபாஷைகருநீக்கிப்பாடினேனே. ௧௨௭

நாகசுப்பிசெயநீர்

பாடியதோர்வகையேதுவின்னங்கேளும்
பலம்பத்துநாகமதையுருக்கிக்கொண்டு
கூடியேவருகவென்றுமிரசத்தைவாங்கி
கூட்டவேபலமூன்றுமொன்றாய்ச்சேர்த்து
நாடியேகல்வத்திலிட்டுக்கொண்டு
நவசாரசெயநீரைவிட்டுஆட்டி
சாடியேநாற்சாமமரைத்தாயானால்
தான்மெழுகாம்பதமதிலேவட்டுப்பண்ணே. ௧௨௮

பண்ணியேரவிமுகத்திற்காயவைத்துப்
பருஞ்சுக்கான்சுண்ணாம்பினடுவேவைத்து
எண்ணியேயெருவைந்திப்புடத்தைப்போடு
யென்னசொல்வேன்சுண்ணமென்றுற்கொடியவேகடம்
வள்ளியென்றுஞ்சாரமென்றும்பச்சையைந்து
மைந்தனேசுன்னமைந்தும்கையாய்க்கூட்டி
உன்னியேசினமுடன்வெடியுப்புங்கார
முத்தமனேவகைவகைக்குப்பலமுங்காலே ௧௨௯

நாலானவகையெல்லாமொன்றாய்ச்சேர்த்துக்
கல்வமதிற்றானரைக்ககருவைக்கேளும்
பாலானபாலாகுஞ்சதுரக்கள்ளிப்
பாலதினாற்றானரைத்துப்பாகங்கேளுஞ்
சாலானபிங்கானிலப்பிநீயுந்
தண்மைபெறப்பனிதனிலேவைத்தாயானால்
வாலானவாருதியாம்பிங்கான்றன்னில்
வந்திறங்குஞ்செயநீரும்வாங்குவாயே. ௧௩௰

வாங்கியேபீங்கானில்வைத்துக்கொண்டு
மைந்தனேதேவிமுன்புபூசைசெய்து
தூங்கியேதிரியாதேசெம்புதன்னைச்
சுத்திசெய்துசெயநீரில்வைத்துக்கொண்டு
தாங்கியேபத்தெருவிற்புடத்தைப்போடு
தப்பாதுமாற்றென்னுவாறரையுங்காணும்
நீங்கியேபோகாதுயிந்தவேதை
நினைவுவைத்தூர்த்தாளைப்பூசைபண்ணே. ௧௩௧

காரீயச்செந்தூரம்.

எண்ணவேகாரீயக்கட்டிவாங்கிப்
பருதியென்றசெயநீரிலுருக்கிச்சாய்த்து
கண்ணவேயைந்துதிரஞ்சாய்த்தாயானாற்
கட்டுமடாகாரீயங்கனகமாகுஞ்
சொன்னதொருகட்டியதுவெட்டையாகுந்
துடியடக்ககல்வமதிலிட்டுக்கேளும்
எண்ணமுடன்தானிடிக்கநொறுங்கிப்போகு
மிதினுடனேசேர்க்கும்வகையின்னங்கேளே. ௧௩௨

கேளேநீசெயநீரைவிட்டேயாட்டி
கேவலமாநினையாதேவிபரஞ்சேர்த்து
வாளேநீபூரமதிற்கூடம்பூரம்
வரிசைபெற்றவெடியுப்புவகையொன்றுக்குக்
கோளேநீவாராமற்கழஞ்சியொன்று
கொடியதொருகாரியங்களஞ்சிமூன்றும்
பாளேநீபோகாமலரைத்துநீயும்
பருவமுடன்மெழுகாகும்பதத்தில்வாங்கே. ௧௩௩

பதத்திலேவாங்கியல்லோவட்டாய்ப்பண்ணி
பண்பானபூநீறுங்கல்லுப்படிச்சுண்ணம்
நிதத்திலேசமனாகவெடுத்துக்கொண்டு
நேர்ப்பாகவகலதனிற்பரப்பிவைத்து
மதத்திலேமாண்டதொருவங்கந்தன்னை
மைந்தனேநடுமையம்வைத்துப்போற்றி
செகத்திலேபோகாமல்சீலைமண்செய்து
சிறப்பாகப்பத்தெருவிற்புடத்தைப்போடே. ௧௩௪

புடத்திலேபோட்டவுடனீறுய்ப்போகும்
போமடாசுண்ணமதுவேகமைந்தா
தடத்திலேவெறிகொண்டயானைக்கொக்குந்
தள்ளாடுஞ்சிந்தியடாவாதத்துக்கு
கொடத்திலேகட்டிவைத்தவரவம்போலக்
கொதிக்குமடாசரக்குகளைக்கண்டபோது
சடத்திலேயிதுவுமொருசடலமாகுந்
தாயானவங்கத்தின்றண்மைதானே. ௧௩௫

சிங்கிசுண்ணம்.

தண்மையென்றவங்கத்தின்சுண்ணந்தன்னை
தானரைத்துப்பூசிவிடுசிங்கிக்கப்பா
வண்மையென்றவெருக்கிலையின்தன்பழுப்பு
மைந்தனேதானரைத்துப்பூசும்போது
வெண்மையென்றவெருக்கிலையின்தன்பழுப்பு
வெகுசுருக்கில்வாதமதுவிள்ளப்போமோ
ஒண்மையென்றசுண்ணமிதிற்கோடிதொந்தம்
ஓகோகோசொல்லரிதுவுரைத்தேன்பாரே. ௧௩௬

உரைக்கவேயின்னமொருசேதிகேளு
முத்தமனேவெள்ளையொருபலந்தான்மூன்று
மறைக்கவேயில்லையடாசெயநீராலே
மைந்தனேசுருக்கிடுநீஜாமமொன்று
நிறைக்கவேயிறுகியதுகட்டிப்போகும்
நேர்ப்பானவெள்ளியுடரேக்கைச்சுத்தி
துரைக்குருவிற்பணவிடைதானெடுத்துக்கொண்டு
சூட்டடாரேக்கதனிலின்னங்கேளே. ௧௩௭

* வெள்ளைசங்கபாஷாணம்.

கேளடாபலமென்றவோட்டைவாங்கி
கிருபைபெறவுவர்மண்ணிற்கொதிக்கவைத்து
கோளடாவாராமல்பலந்தானிரண்டுங்
கூட்டுவாயானைக்கற்சிப்பிரண்டும்
வாளடாரண்டுமொன்றுய்க்கல்வத்திட்டு
மைந்தனேயெறியாலம்பாலாலாட்டி
சூளடாகுகைபோலபண்ணிக்கொண்டு
துப்பரவாயதினடுவிற்கட்டிவையே. ௧௩௮

வைத்துமேயஞ்செருவிற்புடத்தைப்போடு
மருவியந்தரேக்குடனேயுருகிநிற்கும்
செத்துமேபோச்சுத்டாபரஷாணந்தான்
செப்புகிறேன்வெள்ளிக்கைத்திறமதாக
அத்துநீபோகாதேவெள்ளியத்தி
லப்பனேயைம்பதுக்கொன்றுபோடு
சுத்தவெள்ளியிதற்கீடோசொல்லப்போமோ
துப்பறவாய்மாற்றதும்பத்துமாச்சே. ௧௩௯

தாளகச்செந்தூரம்.

ஆச்சப்பாயின்னமொருகருவைக்கேளு
வப்பனேதாளகமும்பலமூன்று
பேச்சப்பாபேசாதேகொண்டுவந்து
பிற்பலமாஞ்சேயநீரிற்றூப்புத்துக்கொண்டு
காச்சப்பாமூன்றுநாள்ரவியிற்போட
கண்டுண்டுபோவதற்குவகையைக்கேளு
மூச்சப்பாயோடாமல்முப்பூசுண்ணம்
முழுக்கவசமாய்க்கட்டிகுகையில்வையே. ௧௪௦

கட்டியேமூன்றெருவிற்புடத்தைப்போடு
கட்டுண்டுவுருகியதுமணிபோனிற்கும்
கெட்டியாய்த்தங்கமொருபலத்தைவாங்கி
கிருபைபெறக்குகைதனிலேயுருகும்போது
மட்டில்லாத்தாளகத்தைக்கொடுத்தாயானால்
வாய்பிளந்துவாங்குமடாதங்கந்தானும்
கொட்டியேகல்வத்திலாட்டும்போது
குறுகுறுத்துமணல்போலநொறுங்கும்பாரே. ௧௪௧

பாரப்பாநொறுங்கியதோர்தாளகத்தைப்
பக்குவமாய்ச்செந்தூரஞ்செய்யக்கேளும்
நேரப்பாகெவுரியுடன்கெந்திசூதம்
நேர்ப்பானவெடியுப்புநிமிளைநாகம்
சேரப்பாயிவையெல்லாம்வகையொன்றுக்குச்
செப்புவேன்கழஞ்சிவிரைசேரக்கூட்டிப்
பேரப்பாமயிற்கொன்றைப்பூச்சாற்றாலே
பிரபலமாய்தானரைப்பாய்ஜாமமப்பாலே. ௧௪௨

* கழஞ்சி-நாற்பதுகுன்றிவிடை.

Sivasawmy Iyer



காலானசாமமத்துரைத்தபின்பு
நன்றாகவட்டுப்பேர்ல்வில்லைப்பண்ணி
காலானவோட்டில்வைத்துச்சீலைமண்செய்
கனக்கவேயேழுசீலைசெய்தபின்பு
ஆலானவஞ்செருவிற்புடத்தைப்போடு
வப்பனேநீறியதுசிந்துரிக்குஞ்
சூலானசூன்மிகுர்துகெற்பம்போல
சொலிக்குமடாவாதமிதிலின்னங்கேளே. கசஙு

கேளடாவெள்ளிதனிஞூற்றுக்கொன்று
கிருபைபெறத்தான்கொடுக்கச்சொல்லக்கேளு
வாளடாமாற்றென்னவிருபத்தைந்து
மைந்தனேசெம்பிலேதான்பத்துக்கொன்று
சூளடாகொடுத்திடவேமாற்றுபத்தாஞ்
சொல்லுவோம்நவலோகமெல்லாந்தங்கம்
கோளடாவாராதுயிர்தப்போக்கு
குறிப்பாகமண்டலந்தான்பனங்காற்கொள்ளே. கசச

கால்கொள்ளமண்டலத்திற்சித்தியாகும்
கனகமிதில்வெகுகோடிகாணலாகும்
மால்கொள்ளுமங்கையடாவரிதாரந்தான்
மைந்தனேயிதன்பெருமையாருங்காணார்
நால்முகமாய்க்கொண்டதொருபிர்மாவாலு
நாயகியாளுகமதையறியப்போமோ
பாலமுதுபோலேபடாயிந்தப்போக்குப்
பார்ப்பதற்குகெவுரியுடபாகங்கேளே. கசரு

கெவுரிபாஷாணக்கட்டு.

பாகமென்னகெவுரியொருபலமேதூக்கிப்
பாச்சடாசெயநீரில்சுருக்குத்தாக்கி
தாகமென்னசாமமொன்றிற்கெவுரிகட்டும்
தனையெடுத்துகல்வத்திலிட்டுக்கொண்டு
ஆகமென்னத்தாளகமுஞ்சிலையுங்கெந்தி
யப்பனேவெடியுப்புநாகந்தானு
மேகமென்றரேக்கதுதான்வகையொன்றுக்கு
மென்னசொல்வோம்பலங்கால்யெடுத்திடாயே. கசசு

* சிலை-மனேசிலை.

எடுத்துமேகல்வமதிலிட்டுக்கொண்டு
யென்னசொல்வேன்செம்பருத்தம்பூஞ்சார்விட்டுத்
தொடுத்துமேதானலரைப்பாய்நாலுசாமந்
துவளவரைத்தேயுருட்டிக்காயப்போடு
அடுத்துமேபொடிபண்ணிச்சொல்லக்கேளு
மப்பனேகாசிபென்றமேருக்கேற்றி
விடுத்ததொருவாலுகையின்மேலேவைத்து
விபரமாய்முன்போலே *தாளிக்கேத்த. கசஎ

* தாளி-மிடா

ஏத்தவேதாளிக்குண்மணலைக்கொட்டி
யென்மகனேரண்டுவிரற்கனந்தானையா
ஆத்தவேஉப்புநன்றாப்பொடித்துக்கொண்டு
வப்பனேமுன்சொன்னகனமேபோட்டு
காத்தவுடன்குப்பியைநீசுத்திக்கட்டிக்
கனக்கவேமணற்கொட்டிக்கழுத்துமட்டுஞ்
சேத்தருள்வேண்டுமென்றுதாயைப்பூசி
சிறக்கவேஅக்கினியைத்திரும்பமூட்டே. கசஅ

மூட்டயிலேதீபம்போற்கனலைமூட்டு
முதற்சாமங்கடந்தபின்யிரண்டாஞ்சாம
மாட்டயிலேகமலம்போலெரிநேர்ப்பாக
வப்பனேயிருசாமமானபின்பு
ஊட்டயிலேகடினமென்றக்கினியைக்கேளு
முத்தமனேயாறவிட்டுதிரும்பமூட்டு
நாட்டயிலேயிராக்காலமாறப்போடு
நாலாநாட்குப்பிதனைவெளியில்வாங்கே. கசகூ

வாங்கடாகுப்பிதனைபாத்தாள்முன்பு
வடுகனையும்பூசைபண்ணிசொல்லக்கேளு
தாங்கடாயவள்பதத்தையிருகையாலே
தாமரையின்பூவதினாலர்ச்சனையுஞ்செய்து
தேங்கடாவாசியைநீயிழுத்துவாங்கிச்
சிவசிவாதூபமொடுதீபங்காட்டி
பாங்கானசெந்தூரங்குன்றியுண்ணப்
பருவமதுபென்னசொல்வேன்பரைசொல்வாளே. கரு௦

சொன்னதொருமண்டலமேகொண்டாயானால்
சோதியடாவுன்தேகஞ்சொல்லப்போமோ
கண்ணுடாச்செந்தூரஞ்சித்தருக்குக்
கருத்திறந்துயான்சொன்னேன்கண்டுபாரு
அன்னமென்றபச்சரிசிப்பாலுங்கூட்டி
யப்பனேபத்தியமாய்க்கொண்டுவாநீ
என்னவேநாம்பெல்லாமிறக்கிக்கொள்ளு
மிதுக்கடுத்தகற்பமொன்றுமீடாகாதே. கருக

ஆகாதகற்பங்களனேகமுண்டு
வதிற்றெளிந்துசொல்லிவிட்டேன்யானுமய்யா
போகாதுகில்களைவிபுமாட்டாது
போக்கதிலேசொல்லுகிறேனின்னங்கேளு
நோகாதுசடலமதுப்பேதியாது
நொந்தாலுமிறுகுமடாசெந்தூரந்தான்
சாகாதுகருவியெல்லாமொன்றாய்ப்போகுந்
தாய்கொடுக்கயானுண்டேன்றண்மைதானே கருஉ

தண்மையென்றசெந்தூரம்வெள்ளிதன்னிற்
றுனிடுவாயாயிரத்துக்கொன்றுதானும்
உண்மையென்றமாற்றென்னவிருபத்தஞ்சு
உத்தமனேசெம்புதானிரும்பதாகும்
நன்மையென்ற *குடவனிலேபத்தரையுமாகும்
நாட்டினேன்நவலோகமெல்லாந்தங்கம்
வண்மைபெறச்சொல்லிவிட்டேனிந்தநூலின்
மார்க்கங்களின்னமுண்டுமருவுங்காணே. கருங

* குடவன்-பித்தளை.

கந்தகபற்பம்.

காணவேகந்தகந்தான்பலமுமூன்று
கருணைபெற்றமுப்பூவின்விராகன்மூன்று
தோணவேரண்டையுந்தானூட்டிவிட்டு
துப்புறவால்நெருப்பிலிட்டுவறுத்திட்டேதான்
பேணவேவெந்துருகிப்பற்பமாகும்
பேசாதேபின்பெடுத்துக்கல்வத்திட்டு
ஊணவேதாளகத்தைச்சரியாய்க்கூட்டி
யுத்தமனேநாகமதுபலமுங்காலே. கருச

காலாவெனடியுப்புவிராகனென்று
கனகமெனுந்தங்கமொன்றுரேக்கதொன்று
பாலானசூதமடாவிராகனஞ்சு
பதிவானசெவுரியுமோர்விராகன்ரண்டு
சேலானதுருசுமேவிராகனொன்று
சேரவொண்ணுக்கல்வத்திலிட்டுக்கொண்டு
மாலானமூலிகைபாம்விஷ்ணுகாந்தி
மைந்தனேசாற்றினாலாட்டுவாயே. கருரு

ஆட்டியேயெண்சாமமரைத்தபின்பு
அப்பனோர்விமுகத்திற்காயவைத்து
சூட்டியேபொடிபோலரைத்துக்கொண்டு
சொல்லுவேன்காசியென்றவோருக்கேற்றி
நாட்டியே * வாலுகையிற்றுளிக்குள்ளே
நன்றாகமுன்போலேவைத்துக்கொண்டு
மாட்டியேதீயிடுவாய்பனிரண்டுசாமம்
மைந்தனேஆட்டிவிட்டப்பால்வாங்கே. கருசு

* வாலுகை - அடுப்பு * ரவி - சூரியன்

வாங்கியேகுப்பியைத்தானுடைத்துப்பாரு
மைந்தனேசெந்தூரமருணன்போலாம்
தாங்கியேவெள்ளியென்றசிமிளில்வைத்துத்
தானந்தவை * ரவினைபூசைபண்ணி
தூங்கியேதிரியாதேகுன்றியுண்ணு
தோர்னமடாவுன்தேகஞ்சொல்லப்போமோ
நீங்கியேபோகும்பலரோகமெல்லாம்
நிட்சயமாயுன்தேகநிலைக்கும்பாரே. கருஎ

பாரப்பாசெந்தூரமாயிரத்துக்கொன்று
படுசெம்புக்கொடுத்திடவேமாற்றுப்பத்து
நேரப்பாவெள்ளியிலேமூவாயிரத்துக்கொன்று
சேர்ந்திடவேயிருபத்தஞ்சுமாற்று
பேரப்பாகந்தகந்தானுயிநாதம்
பெருமையதில்சொல்லவென்னாற்கூடா
நேரப்பாயிதன்பெருமை * மூலநாயன்
நிகண்டிலேசொல்லிவைத்தாரின்னங்கேளே. கருஅ

* மூலநாயன் - திருமூலம்.

## கந்தகத்தைலம்.

இன்னமுந்தான்சொல்லுகிறேன்கந்தகந்தானப்பா
யென்மகனேபலமொன்றுயெடுத்துக்கொண்டு
கன்னமுள்ளக்கருங்குன்றிதன்னில்வாங்கி
கலந்திடுவாய்ப்பலமொன்றுகந்தகத்திலுள்ளே
சொன்னபடிக்கல்வத்திலிட்டுக்கொண்டு
துவளவரைசெங்கொட்டைத்தைலந்தன்னு
லெண்ணவேநெல்லுப்போற்பில்லைபண்ணி
யிதமாகபூபுடத்திற்றைலம்வாங்கே. (கரு௯)

* கருங்குன்றி-கறுப்புக்குன்றிமணி * பூம்புடம் குழிப்புடம்.

தைலமதுவாங்கியே முப்பூச்சேர்த்து
தனித்தொருகந்தகந்தான் பலமும்வாங்கித்
தைலமதுபொல்லாது கந்தகத்துக்கப்பா
தாண்மையாய்ச்சுருக்கிடவே மெழுகுமாகும்
தைலமதுபோலேயடா மெழுகுதானும்
தப்பாமற்பலமதைத்தான் சேர்க்கேயூட்டு
கைலிலேப்போலாடு மெழுகுதானுங்
கண்ணிமைக்குளண்டமெல்லாம் பொன்னாய்ப்போமே. (கசு0)

போகுமேமண்ணுமுதல் மலைகளெல்லாம்
பொன்மயமாய்ப்போகுமடா புகைப்பட்டாக்காற்
சாகுமேசாக்குள்ளே கட்டிக்கொண்டு
தனித்தனியேவேண்டியது யோடும்பாரு
வேகுமேயண்டமெல்லாஞ் சுண்ணத்தாலே
வெகுசுறுக்காய்ச்சொல்லிவைத்தே னிந்தநூலி
லாகுமேமெழுகுவதை செந்தூரம்போக்கு
மப்பனேசந்தேகமில்லாதென்னே. (கசுக)

என்னவேவாதமுன்று கருக்கதனெல்லாம்
மிபம்பிரேமன்னூற்கிற் பேன்னிவ்தாக
சொன்னதொருகாரியங்கஷ்டமக்கில்லாக்
சொல்லிவைத்தேனேதாக்க யிதுக்கில்லா
முன்னோர்கள்கட்டினதோ தொழிலதங்கமின்னில்லா
முன்பின்னாய்க்கெடியோது மோசங்காணும்
கண்ணுனசாஸ்திரங்கள் கோடியுண்டு
கருக்குருவுந்தெரியாமற் கட்டினாரே. (கசுஉ)

சட்டமுனி.

கட்டியதோர்காரியங்கள் பார்த்துபார்த்து
கருக்கிடையாய்த்தோணுமற் கலங்கிஞர்கள்
ஒட்டிவைத்தசாஸ்திரங்கள் கோடியுண்டு
வொருவருக்குந்தெரியாம லலைந்தார்கோடி
வெட்டைவெளியாக்வேதான் சட்டைநாதர்
விளம்பிஞர்தீட்சவிதி யிருநூற்றுள்ளே
தொட்டதொருகருக்களெல்லாம் வெள்ளையாய்ச்சொன்ஞர்
தெரிகுறிபோலரும்பட்ட யிந்தநூலே. (கஅ௩)

நூலானதீட்சவிதி யிருநூறுந்தான்
நொடிக்குமுன்னேபாடிவைத்தார் சட்டைநாதர்
சேலானதொன்றுமில்லை யிந்தநூலுஞ்
செப்பினேனிந்நூலைவெகு தெளிவதாகப்
பாலானபாலதுபோல் வெண்மையாகும்
பாடினேன்மனிதரெல்லாம் பிழைக்கவென்று
காலானநூலறிந்து மூலநாயன்
கயிலாசவரையிற்போய்க் கூடிஞரே. (கஅ௪)

கூடியேசித்தரெல்லா மிருந்துக்கொண்டு
கூட்டிவந்தார்சட்டைமுனி நாதன்தன்னை
பாடினதோர்நூலெடுத்துப் படிக்கச்சொன்ஞர்
பயனெல்லாந்தானறிந்து கோரக்கமாமுனி
யாடியதோரம்பலத்தி லிருந்தார்பாரு
மப்போதேயென்னைக்கு புசண்டர்வாங்கிச்
சூடியதோர்சடாமகுடந்தன்னிலேதான்
சொருகிவைத்தார்சொருவருக்குந் தோணுதென்றே. (கஅ௫)

தோணுதுவென்றுசொல்லியெடுத்துக்கொண்டு
சொக்கியேகுளிகையிட்டுப் போயிருந்தமேவி
காணுதுவென்றுசொல்லி யெழுந்தானதன்
கையிலேதான்கொடுத்தார் மன்னர்தன்னை
யாணுதயாணுவந்தால் சொன்னதொன்று
மப்போதுகுகைதனிலே யொளிந்தாரைய
ஆணுதமவுனத்தை தியானஞ்செய்ய
தொருயுகந்தான்றெண்டெண்ணி விளங்கிஞரே. (கஅ௬)

வாங்கியேபகமலமுனி தனக்குயிந்தேன்
வாய்த்துதென்றமவர்தாஞ் மடக்கஞ்செய்தார்
நீங்கியேபிரபஞ்சந் தன்னைவிட்டு
நிலையான சாஸ்திரத்தில் சித்தனானர்
தாங்கியேயவருடைய மற்றோர்க்கெல்லாஞ்
சாத்திரமுறைநூற்றின் விபரமெல்லாந்
தூங்கியேதிரியாதே யுன்னுற்றன்னை
சோதித்தாற்கருக்களெல்லாந் தோணும்பாரே. (௧௬௭)

தோணுமேவாதமொடு ஞானஞ்சித்தி
சொல்தனக்குயெட்டாத மவுனஞ்சித்தி
யாணுமேகெவுனசித்தி காயசித்தி
யப்பனேயட்டமா சித்தியெல்லா
மூணுமேமனமதுதான் பேதியாமல்
லோகேகோகருக்களெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
கோணுமேசெகஜால மாய்கையெல்லாங்
கொடும்பாழாய்போகுமடா யின்னங்கேளே. (௧௬௮)

(௪௯)

## கருங்கோழியண்டம்.

கௌப்பாவண்டமதில் வித்தையொன்று
கேசரியாள்சொல்லிவைத்தார் ளெந்தனுக்கு
கோளடாவாராம லண்டமென்ற
கோழியடகருங்கோழி கொண்டுவந்து
வாளடாகந்தகந்தான் சுத்திசெய்து
மைந்தனேபலமொன்று யாவின்நெய்யால்
நாளடாவிட்டரைத் தூருட்டிக்கொண்டு
நாண்மூன்றுகொடுத்துவிடு சுத்தியாமே. (௧௬௯)

சுத்தியாங்குக்கிடத்திற் றிரேகமெல்லாஞ்
சூட்டுவோம்பின்புசெய்யும் வகையைக்கேளு
பத்தியாமவுரியிலைப் புதுசாயுமபார்த்து
பலங்காலாஞ்*சூரிவிதை விராகனொன்று
முத்தியாமிரசமது தான் கழஞ்சியொன்று
மூர்க்கமுள்ளவமுத்துமா வுளஞ்சிமூன்று
அத்தியாமுகவனைத்தான் புனைந்துபோற்றி
யரினியென்றகோழிக்கு மணித்திட்டாயே. (௧௭௦)

(௫௦)

* சூரிவிதை - எத்தன்குருவித்து.

